உ
சிவகுகமயம்.
திருச்சிற்றம்பலம்.
ஓம் தத் ஸத் பிரஹ்மணே நம:

இஃது
திருவாரூர் வன்மீகபுரமென்னும் மடப்புரம்
ஸ்ரீ பரமகருணாநிதி குரு
தக்ஷிணாமூர்த்தி சுவாமிகள்

# திருப்பதிகம்.

இஃது
பள்ளத்தூர் ஸ்ரீமாந்.
மு. ரும. சோலையப்ப செட்டியார்
அவர்கள் குமாரர்
மகா-ள-ள-ஸ்ரீ சிவநேயச் செல்வராகிய
சாமிநாதன் செட்டியார் அவர்கள்
விருப்பத்திற்கிணங்க
திருக்கைலாய பரம்பரைத் திருவாவடுதுறை
யாதீன மஹாவித்துவானும் மதுரைத் தமிழ்சங்கத்து
சைவநூற்பரிசோதகருமாகிய சேற்றூர்
மு. ரா. சுப்பிரமணிக் கவிராயரவர்கள் மாணாக்கர்
ஆலங்காடு வை. செல்லையாச் செட்டியாரவர்களால்
இயற்றப்பெற்று

மேற்கண்ட பள்ளத்தூர்
ஸ்ரீமாந் மு. ரும. சாமிநாதன் செட்டியாரவர்கள்
பொருளுதவியால்
இரங்கோன்
"சுதேசபரிபாலினி" அச்சியந்திரசாலையில்
பதிப்பிக்கப்பெற்றது.
1926.






சிவமயம்

# முகவுரை.

பொன்னிமாநதியுடை பரந்தெங்குந் துன்னிய பல்வளந் துலங்கிடவிளங்குஞ் சென்னி நன்னாட்டில் திருவாரூர் என்னுந்திவ்விய க்ஷேத்திரத்தின் அயலே யுள்ள வன்மீகபுரமென்னும் மடப்புரத்தில் ஸ்ரீ பரம கருணாநிதியாகிய குரு தக்ஷிணாமூர்த்தி சுவாமிகள் நிஷ்டானுபூதிச்செல்வராய், சமாதி கொண்டெழுந் தருளி, இக்கலியுகத்தில் அளவின்றிய அற்புதங்கள் தோன்ற எம்மதத்தினரும் போற்றிப்பணிய வேண்டிய வேண்டியாங்கெய்துமாறு இன்னருள் புரிந்து வருவதை யாவரும் நன்கறிந்ததே. அஃதங்கனமாக·

செந்தமிழ்ப் பாண்டித்திரு நாட்டிலுள்ள பள்ளத்தூர் என்னும் நகரத்தில் மகுட தன வைசியர் குலத்தில் திருவவதாரஞ்செய்து கோவிலூர் ஆண்டவர் என்று வழங்கும் முத்து ராமலிங்க சுவாமிகளிடத்து உபதேசம் பெற்று வேதாந்த பானுவாய் விளங்கி நிஷ்டைகூடிய ஸ்ரீமத் முத்து வீரப்ப சுவாமிகளின் பௌத்திரரும் ஸ்ரீமாந் சோலையப்ப செட்டியார் அவர்களின் புத்திரரும் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி சுவாமிகளின்

திருவடியே துணையென நம்பி இரவினுங் கனவினும் பகலினும் எந்த நேரத்திலும் சிந்தைவிட்டகலாது தியானிப்பவரும்

ஊருணி நீர்நிறைந் தற்றே யுலகவாம்
பேரறி வாளன் திரு
பயன்மரம் உள்ளூர் பழுத்தற்றாற் செல்வம்
நயனுடைய யான்கட் படின்

என்ற அருட் பெருவாக்கிற் கிலக்கியமாய் அமைந்தவர்களும் ஆகியபள்ளத்தூர் ஸ்ரீமாந் ரூம. சொ. சாமிநாதன் செட்டியார் அவர்கள் அடியேனை மேற்கண்ட தக்ஷிணாமூர்த்தி சுவாமிகளின் மேல் தோத்திரரூபமாக பத்துச் செய்யுளில் ஒரு பதிகம் பாடித் தரல் வேண்டுமென்று கேட்டார்கள்.

அடியேனும் அப்பெரியார் கட்டளையைச் சிரமேற் கொண்டு அடியேனுக்கு அவ்வாற்றலில்லை யேனும் பெரியோரேவிய பணியை ஆற்று முறையில் பாடிக்கொடுக்கலானேன். அன்பர்கள் யாவரும் படித்து இன்புறுமாறு வேண்டுகின்றேன். செட்டியாரவர்கட்கு ஸ்ரீ தக்ஷிணா மூர்த்தி சுவாமிகளின் கடாக்ஷத்தால் சகல நன்மைகளும் உண்டாவதாக.

சுபம் ! சுபம் !! சுபம் !!!

அன்பன் வை. செ.

ஆலங்காடு.

உ

சிவமயம்.

# சாற்றுக்கவி.

மேலைச்சிவபுரிச் சன்மார்க்க சபைக்காரியதரிசியும்
தற்சமயம் பூந்தட்டானில் வசிப்பவருமாகிய
திரு. மு. கு. ம, குமரப்ப செட்டியாரவர்கள்
இயற்றியது.

---

தவநிதியாஞ் சோலையப்பத் தனவணி கன்
றருங் குமரன்.
நவநிதியார் பள்ளத்தூர் நற்சாமி
நாதனென்பான்
அவனிநியாணஞ் செய்யும் ஆரூர்மா
மடப்புரம் வாழ்
சிவநிதியாந் தக்ஷிணாமூர்த்தி யருட்
டிருவடிக்கே
செய்யு ளொரு பத்தாகத் திருப்பதிகம்
ஒன்றியற்றி
அப்ப தருவாயெனவே ஆலவனத்
துறைபுலமை
துய்யவனுஞ் செல்லைபச்சு குணனியற்
றினனினிதாய்
வையமெலாமகிழ்ந் தோங்க வளருமரும்
பொருள் தொகுத்தே.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஓம் தத் ஸத் பிரஹ்மணே நம:

இஃது

திருவாரூர் வன்மீகபுரம் என்று வழங்கும்
மடப்புரம் என்னும் திவ்விய க்ஷேத்திரத்தில்
ஆனந்த நிஷ்ட்டாபரராய் வீற்றிருக்கும்
ஸ்ரீமத் பரமகருணாநிதி

## குரு. தக்ஷிணாமூர்த்தி சுவாமிகள்

# திருப்பதிகம்.

---

கணபதி வணக்கம்

நேரிசை வெண்பா.

தண்ணார் பொழிற்கமலைத் தக்ஷிணா மூர்த்தியின்மேற்
பண்ணாருஞ் செந்தமிழ்ப்பாப் பாடுதற்கின்—கெண்ணாருந்
தந்திமுகந் தண்ணலிரு தண்டையணி செம்பதுமம்
வந்துதவி செய்யுமகிழ் வாய்.

# நூல்.

## எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அருள்கனிந் தொழுகுஞ் சச்சிதா னந்த
அண்ணலே நாதமுங் கடந்த
பொருளதா யொளிரும் போதமுங் காணப்
போதமே யாதியீ றில்லாத்
தெருளதாய் நித்யா னந்தபோ தமுமாய்த்
திருமிகு மடப்புரத் தமர்ந்தாய்
தருணமீ தருள்வாய் சற்குரு மணியே
தக்ஷிணா மூர்த்தி நாயகனே. (1)

குறிகுணங் கோலங் கடந்துமற் றெங்குங்
குறைவற நிறைபர சிவமே
அறிவினுக் கறிவா யனாதியாய்த் தொழில்கள்
ஐந்திற்கும் அப்புற மாகி
முறைமையி னோங்கு முத்தனே கமலை
மடப்புரத் துறைமுழு முதலே
தறுகணேன் றனக்குன் றண்ணருள் புரிவாய்
தக்ஷிணா மூர்த்தி சற்குருவே (2)

பூரணப் பொருளாய் நித்தமாய்ப் போக்கும்
புணர்வுமீ ளலுமிவற் றேடுங்
காரண மாகு மிவையெலாங் கடந்த
கதியுமாய்க் கருணையங் கடலாய்க்
காரணி பொழில்சூழ் கமலையி னயலே
கருதரு மடப்புரத் தமர்ந்தாய்
தாரணி புகழுஞ் சற்குரு மணியே
தக்ஷிணா மூர்த்தி நாயகனே. (3)

இந்திர சாலம் புரிபவ னவற்றின்
இயைவுறு தியாரையு மயக்குந்
தந்திர மதனிற் சார்வுறு ததுபோல்
சாக்ஷியாய் நின்றதற் பரனே
வெந்துய ரகற்றிப் பிறவிநோ யறுக்கும்
வித்தக னேமடப் புரம்வாழ்
சந்தமார் தருமெய்ஞ் ஞானசற் குருவே
தக்ஷிணா மூர்த்திநா யகனே (4)

என்னடி வேண்டும் என்னடி வேண்டும்
எனத்திரு வாயினா ரலையோர்
கன்னிமேற் காரி யுமிழ்ந்தனை யவளுங்
கருதரும் ஞானமெய் தினளாய்
உன்னடி வேண்டும் உன்னடி வேண்டும்
எனவுரைத் துடற்பிணி யோடும்
தன்னதாம் பவமுங் கடந்தனள் கமலைத்
தக்ஷிணா மூர்த்தி சற்குருவே. (5)

உன்றிரு வடியே தஞ்சமென் றடைந்தோர்க்
கொருகுறை வேனுமிங் குளதோ
வென்றியும் பொருளும் புத்திரப் பேறும்
விரும்புமெய்ஞ் ஞானமும் அருளித்
துன்றிய வேதாந் தத்தினிற் பழுத்த
சுத்தவத் துவிதசித் தாந்தத்
தன்றனிப் பொருளும் அன்பருக் கருளுந்
தக்ஷிணா மூர்த்திசற் குருவே (6)

கருவினைக் கடந்த கருவதாய் ஞானக்
கண்ணிலார் அறியொணு அருளே
உருவினைக் கடந்த வுருவதா யுண்மை
யுடனறி வானந்த மயமாய்
அருவுட னுருவு மருவுரு வழுமற்
றகண்டித மானமெய்ப் பொருளே
தருவென வடியார்க் கருள்தருங் கயிலைத்
தக்ஷிணு மூர்த்திசற் குருவே. (7)

செப்பினிற் களிம்பா மெனவணு தியிலே
சேர்தரு மிருண்மல மதனல்
வெப்பியே மோக முறுமணுக் களையு
மேதக வாக்கிட அருளால்
கப்பித மகற்றித் தனுமுத லீந்தே
கருணையார் சூரிய னுகித்
தம்பத மருள மடப்புரத் தமர்ந்த
தக்ஷிணு மூர்த்திசற் குருவே (8)

புவியெலாந் திரிந்தும் புனலெலாம் படிந்தும்
போனக மின்றிநீ ரருந்திச்
சவமென வனியை யடக்கியும் விரதஞ்
சார்ந்து மிவ்வித முடல் வருந்திக்
கவனமாய்த் திரிந்து மாவதென் னினது
கழல்பணி யார்பிறப் பறுமோ
தவமெலாங் கடந்த தத்துவப் பொருளே
தக்ஷிணு மூர்த்திசற் குருவே (9)

தேவர்கள் தேவே சிவபரஞ் சுடரே
சின்மய மானசற்குருவே
மூவரு மறியா முதல்வனே மூவா
முத்தனே புழுமணி விளக்கே
பாவியே னுனது பரிசெலா முணர்ந்து
பக்திசெய் தன்புடன் பாடத்
தாவிலாப் பொருளே தன்னருள் புரிவாய்
தக்ஷிணா மூர்த்திநா யகனே (10)

ஸ்ரீமத் பரமகருணா நிதி குரு தக்ஷிணாமூர்த்தி
சுவாமிகள் திருப்பதிகம் முற்றுப்பெற்றது.
(திருச்சிற்றம்பலம்)

வாழ்த்துப்பா.

சீர்மேவுஞ் செல்வத் திருப்பாண்டி நாடதனில்
பேர்மேவும் பள்ளத்தூர்ப் பேர்நகர்வாழ்—ஏர்மேவும்
நீதியுறுஞ் சோலையப்ப னீன்றகும ரன்சாமி
நாதவள்ளல் வாழ்க நயந்து.

வாழி வேதா கமங்களும் வாழிய
வாழி யீச னடியவர் வாழிய
வாழி யாரூர் மடப்புரம் வாழ்குரு
வாழி யூழி மகிழ்ந்திப் பதிகமே.

ஓம் தத்ஸத்.



